# கர்ம யோகம்

## முன்னுரை:

நாம் அனைவருமே காலை முதல் மாலை வரை ஏன், இரவு படுக்கும் முன் வரை ஏதாவது ஒரு செயலில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கிறோம். குழந்தை முதல் கிழவன் வரை எல்லோருமே அன்றாடச் செயல்களான உண்பது, உறங்குவது போன்ற செயல்களைச் செய்வதில் தவறுவதில்லை. பொறுப்பான வேலைகளிலும் ஈடுபட்டுச் செய்து கொண்டிருக்கிறோம்.

நம் செயல்கள் பணத்திற்காகவோ, மற்றுமுள்ள உடைமைகளுக்காகவோ இருக்கலாம். நம் குறிக்கோள் "தர்ம, அர்த்த, காம" என்கின்ற வகையில் இருந்தாலும், இறுதியில் எல்லோரும் தேடுவது மனநிம்மதி - மகிழ்ச்சிதான். இந்த உலகில் படைக்கப்பட்ட அனைத்து ஜீவ-ராசிகளுக்கும் மனநிம்மதி என்பது இயற்கையே.

## கர்மம்

நாம் செய்யும் செயல் கர்மம் எனப்படும். இந்தச் செயல் இரண்டு விதமானது. பலனை விரும்பிச் செய்யும் செயல் "ஸகாமம்" என்றும், பலனை விரும்பாமல் செய்யப்படும். செயல் "நிஷ்காம கர்மம்" என்றும் கூறப்பட்டுள்ளன.

## ஸகாம கர்மம்

வேதத்தில் கூறப்பட்டுள்ள வைதிக கர்மாக்கள் மூலம் உலகியல் பயனை அனுபவிக்கச் செய்யப்படும் செயல்கள் ஸகாம கர்மம் எனப்படும். எடுத்துக்காட்டாக, "ஜ்யோதிஷ்டோம யாகம்" எனப்படுவது சொர்க்கத்தை அடைவதற்காகச் செய்யப்படும் யாகம். "புத்ர காமேஷ்டி யாகம்" எனப்படுவது நல்ல சந்ததிகளைப் பெறுவதற்காகச் செய்யப்படுவது. இது போன்று நமது சாஸ்த்திரத்தில் பல்வேறு வகையான யாகங்கள், யக்ஞங்கள் கூறப்பட்டுள்ளன.

## நிஷ்காம கர்மம்

பலனை விரும்பாமல் செய்யும் செயல்கள் நிஷ்காம கர்மம் எனப்படும். பலனில் பற்றில்லாமல் செய்யப்படும் செயல்கள் என்றும் நிஷ்காம கர்மத்தினைக் குறிப்பிடலாம். ஸகாம கர்மம் தற்காலிகமான பலனைக் கொடுக்குமே தவிர நிரந்தரமான ஆனந்தம் கொடுக்காது. சாஸ்த்திரத்தினால் விதிக்கப்பட்ட நித்ய, நைமித்திக கர்மாக்கள், மனித சமுதாய நன்மைகளுக்காகச் செய்யப்படுபவை. எடுத்துக்காட்டாக, சாஸ்திரம் பஞ்சமகா யக்ஞம் என்று 5 விதமான கர்மாக்களைக் கூறுகிறது.

அவையாவன:- தேவயக்ஞும், பித்ருயக்ஞும், ப்ரம்ம யக்ஞும், மனுஷ்ய யக்ஞும், பூத யக்ஞும் ஆகும். செயலின் அளவு சிறியதாக இருந்தாலும், பலனில் பற்றில்லாமல் செய்யப்-படுமானால், அச்செயல் ஜனன, மரண பயத்தை நீக்க வல்லது.

"நேஹா பி$_4$க்ரம நாசோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்$_3$யதே

ஸ்வல்பமப்யஸ்ய த$_4$ர்மஸ்ய த்ராயதே ம"தோ ப$_4$யாத்"

- கீ - 2 - 40

நாம் செயல்களை, ஸகாமமாகச் செய்வதை விடுத்து, நிஷ்காமமாகக் செய்வதையே குறிக்கோளாகக் கொள்ள வேண்டும்.

## சுக துக்கம்

எந்த ஒரு செயலைச் செய்யும் பொழுதும், நிரந்தரமான சுகம் தரக்கூடிய மோட்சத்தைக் குறிக்கோளாகக் கொண்டதாக இருக்க வேண்டும். சுகமும், துக்கமும் கலந்தது தான் வாழ்க்கை. எந்த ஒரு சுகமும் துக்கத்தைத் தன்னுள் அடக்கியதாகவே இருக்கும். சுகம் வந்தால் துக்கமும் அதனுடன் வந்துதான் ஆகும். சுகம் கிடைக்காத பொழுது கிடைக்கவில்லையே

என்று ஏக்கம்; சுகத்தை அனுபவிக்கும் பொழுது இந்த சுகம் போய் விடுமோ என்று வருத்தம், இது மனித இயல்பு. எனவே, சுக துக்கம் கலந்ததுதான் வாழ்க்கை என்று உணர்ந்து அதனை ஏற்றுக் கொள்ளப் பழக வேண்டும். இந்த சுக துக்கத்துக்கு என்ன காரணம்?

## நல்வினை, தீவினை

முந்தைய பிறவிகளில் நாம் செய்த நல்வினை, தீவினை தான் இப்பிறவியின் சுக துக்கத்திற்குக் காரணம். நாம் செய்த வினைகளுக்கு ஏற்றவாறுதான் நம் வாழ்க்கை அமையுமென்பது தெளிவு.

## நிரந்தர சுகம்

நிரந்தரமான சுகம் தரக்கூடிய வாழ்க்கை நமக்குக் கிடைக்குமா? அப்படிப்பட்ட வாழ்க்கையை நாம் அடைய முடியுமா? இதற்கு வேதம் நமக்கு வழிகாட்டி விடை அளிக்கிறது. கர்மத்தையே கர்மயோகமாகச் செய்வதன் மூலம் நாம் நிம்மதியான ஆநந்தமான வாழ்வைப் பெறமுடியும் என்று வேதம் அறைகூவல் விடுக்கிறது.

## கர்மயோகம் என்றால் என்ன?

பொதுவாகக் கர்மம் என்றால் செய்யும் செயலைக் குறிப்பது. கர்மயோகம் எனப்படுவது செயலின் பின்னால் இருக்கும் எண்ணத்தினை மனப்பாங்கினைக் குறிக்கும். நமது செயல்களை இறைவனின் ஆணையாகவும், செயலின் பலனை இறைவனின் பிரசாதமாகவும் ஏற்றுக் கொள்ளும் பொழுது அச்செயல்கள் கர்மமாக இல்லாமல், கர்மயோகமாக மாறிவிடும். கர்ம பலனைப் பற்றில்லாமல் இறைவனிடமிருந்து கிடைத்த பிரசாதம் என்கிற பாவனையுடன் ஏற்றுக் கொண்டால், அதே செயல் கர்ம யோகமாக மாறி நமக்கு மனநிம்மதியைக் கொடுக்கும். எந்த ஒரு செயலும் நிச்சயமாக பலன் கொடுக்கும். அது அனுகூலமானதாகவோ, பிரதிகூலமானதாகவோ இருக்கலாம். பிரசாத பாவனை, பிரதிகூலமான பலன் வரும் பொழுதும் அதனை ஏற்றுக் கொள்ளக்கூடிய மனோதிடத்தைக் கொடுக்கும். இது கர்மயோகத்தின் நன்மை. இப்படிப்பட்ட செயல்கள் உயர்ந்தவை. மாறாக - பிரசாத பாவனை இல்லாமல் செய்யப்படும் செயல்கள் வெறும் கர்மமாகக் கருதப்படும்.

"கர்மண்யேவாதி காரஸ்தே மா பலேஷு கதாசந
4 2 3

மா கர்மபலஹேதுர் பூர்-மா தே ஸங்கோஸ்த்வகர்மணி"
2 4 3

- கீ - 2 - 47

"யோகஸ்த:குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய
3 2 3 4

ஸித்த்ய ஸித்த்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே"
3 4 3 4 4 3

- கீ - 2 - 48

## பஞ்சமஹாயக்ஞும்

புனிதமான 5 யக்ஞுங்கள் பஞ்சமஹா யக்ஞும் என்று சாஸ்திரம் கூறுகிறது. தேவயக்ஞும், பித்ருயக்ஞும், ரிஷியக்ஞும், அல்லது ப்ரம்ம யக்ஞும், மனித யக்ஞும், பூதயக்ஞும் எனப்படுவன. நம் அன்றாட வாழ்க்கையில் நம்மை அறியாமலேயே 5 விதமான பாபங்கள் செய்து விடுகிறோம் என்று தர்ம சாஸ்திரம் கூறுகிறது. இந்தப் பாபங்கள் "பஞ்சமஹாயக்ஞும்" செய்வதன் மூலம் நீங்குவதாக தர்ம சாஸ்திரம் கூறுகிறது.

## பஞ்சசூனாக்கள்

"கண்டனம், பேஷனம், சுல்லி, உதகும்பஸ்ச மார்ஜனீ பஞ்சசூனா: க்ரு"ஸ்தஸ்ய பஞ்சயக்ஞாத் ப்ரணச்யதி"

பஞ்சசூனா எனப்படும் பாவங்களாவன: காய்கறி நறுக்கும் பொழுது, உரலில் மாவு அரைக்கும் பொழுது, சமையலுக்காக அடுப்பினைப் பற்ற வைக்கும் பொழுது, வீடு சுத்தம் செய்யும் பொழுது, தண்ணீர்ப் பானை வைத்திருக்கும் இடம் சுத்தம் செய்யும் பொழுது நாம் நம்மை அறியாமலேயே மிக நுண்ணிய கிருமிகளைக் கொன்று விடுகிறோம். இவை அனைத்தும் "பஞ்சமஹாயக்ஞம்" செய்வதன் மூலம் நீங்கி விடும் என்று தர்மசாஸ்திரம் கூறுகிறது.

## பஞ்சமஹாயக்ஞம்

யக்ஞம் என்று சொல்லும் பொழுது நம் அனைவருக்கும் அக்னி வளர்த்துப் பெரிதாக ஏதோ செய்வது என்று தான் தோன்றும். அப்படி அல்ல. "பஞ்சமஹாயக்ஞம்" பற்றி சாஸ்திரம் விரிவாக கூறுகிறது.

## தேவ யக்ஞம்:

இந்த உலகம் உயிருள்ள உயிரற்ற பொருட்களாலானது. இறைவன் உலகைப் படைக்கும் பொழுது உலகிலுள்ள ஜீவ-ராசிகளுக்குத் தேவையான காற்று, நீர், நெருப்பு, உணவு ஆகியவற்றையும் படைத்தார். நமக்குத் தேவையானவற்றைக் கொடுத்த இறைவனுக்கு தினம் நன்றி செலுத்துவது நமது கடமையாகும். நமது நன்றியை 9 விதமான பக்தி பண்ணுவதன் மூலம் தெரிவிக்கலாம்.

"ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவனம்

அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் ஸக்யம் ஆத்ம நிவேதனம்"

9 விதமான பக்தியையும் பண்ண முடியாவிட்டாலும் குறைந்தது ஏதாவது ஒன்றின் மூலமாகவாவது நம் நன்றியை வெளிப்படுவது நமது கடமையன்றோ? இவ்வாறு இறைவனுக்கு பக்தியின் மூலமாக நன்றி தெரிவிப்பது தேவயக்ஞம்.

## பித்ரு யக்ஞம்:

நாம் இந்த உலகில் தோன்றுவதற்கு நம் பெற்றோர் காரணம். அவர்கள் தோன்றுவதற்கு அவர்களது பெற்றோர் காரணம். இப்படி நம் முன்னோர்கள்தான் நமது தோற்றத்திற்குக் காரணம். இந்த முன்னோர்களுக்கு நன்றி சொல்வது பித்ருயக்ஞம். சிரார்த்தம், பித்ரு தர்ப்பணம் செய்தன் மூலமாக மறைந்த நம் முன்னோர்களை மகிழ்வித்து அவர்களின் ஆசி பெறுவது பித்ரு யக்ஞம். நம் கண் முன்னால் இருக்கும் நமது பெற்றோருக்கு நமஸ்காரம் செய்வதன் மூலம் அவர்களின் ஆசியும் பெறலாம்.

## ரிஷி யக்ஞம்:

நமது முன்னோர்களாகிய ரிஷிகள் தம் தவவலிமையாலும், அவர்களின் நுண்ணறிவினாலும் இறைவனின் வாக்குகளான வேதத்தைப் புராணங்கள், இதிகாசங்கள், ஸ்ம்ருதி வாயிலாக நமக்குத் தந்து அருளியிருக்கிறார்கள். அவற்றை நாம் பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்வதன் மூலம் அவர்களுக்கு நம் நன்றியைத் தெரிவிக்க வேண்டும். இது ரிஷியக்ஞம் அல்லது ப்ரம்மயக்ஞம் எனப்படும்.

## மனித யக்ஞம்:

அதிதி யக்ஞம் என்றும் மனித யக்ஞத்தைக் கூறலாம். சக மனிதர்களுக்கு அன்புடனும், கருணையுடனும், மனித நேயத்துடனும் உதவிக் கரம் நீட்ட வேண்டும். விருந்தினர்களை உபசரிப்பது நம் பண்பாடு. நமது தர்ம சாஸ்திரத்தில் "மனித சேவை மாதவ சேவை" என்றும், "மனிதனுக்குச் செய்யும் தொண்டு மகேசனுக்குச் செய்யும் தொண்டு" என்றும் கூறப்பட்டுள்ளது.

## பூத யக்ஞம்:

இறைவன் மனிதர்களை மட்டுமின்றி விலங்குகள், பறவைகள், புழு-பூச்சிகள், செடி-கொடிகள், மரங்கள் முதலியவற்றையும் தோற்றுவித்து இருக்கிறார். எத்தனையோ வகைகளில் நமக்கு உதவி அளிக்கும் அத்தகைய ஜீவ ராசிகளுக்கு, உணவு, நீர் அளிப்பதன் மூலம் நம் நன்றியை வெளிப்படுத்தலாம். இதன் மூலம் சுற்றுப்புறச் சூழலை சமன்படுத்தி நாம் ஆரோக்கியமாக வாழ முடியும்.

இந்த 5 மஹா யக்ஞங்களைக் கடைப்பிடிப்பது தான் கர்ம யோகமாகும்.

"யக்ஞ சிஷ்டாசிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி3ஷை:
பு4ஞ்ஜதே தே த்வக4ம் பாபா யே பசந்த்-யாத்மகாரணாத்"

- கீ - 3 - 13

யக்ஞப் பிரசாதத்தை ஏற்றுக் கொள்வதன் மூலம் நமக்குப் பாவ நிவர்த்தி கிடைக்கும்.

## நான்கு நிலைகள்

மேலும் நாம் நமது கர்மாவை - கடமையைச் செய்யும் பொழுது நம் மனதில் நான்கு நிலைகளை நிலை நிறுத்த வேண்டும்.

## முதல் நிலை:

எந்த ஒரு செயலையும், இறைவனின் ஆணைப்படி, இறைவனை மகிழ்விப்பதற்காகச் செய்கிறேன் என்ற பாவனையுடனும், அடக்கத்துடனும் செய்ய வேண்டும். ஒவ்வொரு செயலும் பலனைக் கொடுக்கத்தான் செய்யும். அந்தப் பலனைப் பிரசாதமாக ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் வந்தால், அதுதான் கர்ம யோகமாகும். இப்படிப்பட்ட மனப்பான்மையுடன் செயலாற்றும் பொழுது நமது செயலை உன்னதமான நிலையில் செய்ய முடியும்.

இவ்வாறு நிஷ்காமமாகச் செய்யும் பொழுது உலகியல் பலன், ஆன்மீக முன்னேற்றம் இரண்டும் கிடைக்கும்.

## இரண்டாம் நிலை:

நாம் செய்யும் செயல்களை யக்ஞமாகச் செய்ய வேண்டும். யக்ஞம் என்றால் அக்னி வளர்த்து, மந்திரம் சொல்லி, தேவதைகளைத் திருப்திப் படுத்தும் ஹோமம் மட்டுமே அல்ல. ஒவ்வொரு செயலையும், ஆயாசமில்லாமல், சுயநலமில்லாமல், இறைவனுக்குச் செய்யும் தொண்டாக நினைத்து, பலனில் பற்றில்லாமல் செய்தால் அதுதான் புனிதமான யக்ஞம் எனப்படும். இப்படிச் செய்யும் எந்த ஒரு சிறிய செயல் கூட யக்ஞமாக மாறி மனிதனைப் புனிதப்படுத்திவிடும்.

"யஜ்ஞார்த்தாத் கர்மணோன்யத்ர லோகோऽயம் கர்மபந்தந:
2 3 4

ததர்தம் கர்ம கௌந்தேய முக்த ஸங்க ஸமாசர"
3 2 3

- கீ - 3 - 9

## மூன்றாம் நிலை:

கர்மா அல்லது செயல் தர்மமாகச் செய்யப்பட வேண்டும். "தர்மோ ரக்ஷதி ரக்ஷித:"

தர்மத்தின் எல்லைக்குட்பட்டுச் செய்யும் செயல் நம்மைக் காப்பாற்றும் என்று சாஸ்திரம் கூறுகிறது. நமது செயல் தர்மத்தின் வரையறைக்குள் தான் இருக்கிறது என்று எவ்வாறு அறிந்து கொள்வது? நாம் செய்யும் செயல் தர்மத்துடன் கூடியதாக இருந்தால் அச்செயல் நம்மை பந்தப்படுத்தாது; ஒரு வருத்தத்தை நமக்குள் உருவாக்காது; மற்றவர்களைப் புண்படுத்தாது; மாறாக, அச்செயல் நன்மை பயக்கும்.

இக்காரணத்தினால்தான் நம் முன்னோர்கள், "தர்மத்தின் வடிவமாக வாழ்ந்த ஸ்ரீராமனை முன்னுதாரணமாகக் கொண்டு வாழ வேண்டும்" என்று சொன்னார்கள். தார்மீகமான முறையில் தேவையான அளவு பணம் ஈட்டலாம் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. அதே சாஸ்திரம் அப்படி சம்பாதித்த செல்வத்தை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும் என்றும் கூறுகிறது.

"ஆகாரார்த்தம் கர்ம குர்யாத் அஜஸ்ரம்
ஸ்யாத் ஆகார: ப்ராண ஸந்தாரணார்த்தம்
ப்ராண தார்யா: ஸத்வ ஜிக்ஞாஸனார்த்தம்
தத்வம் க்ஞேயம் யேன பூயோன துக்கம்"

செல்வத்தை நன்முறையில் நல்ல காரியங்களுக்குப் பயன்படுத்தினால் புண்ணியம் கிட்டும். அந்தப் புண்ணியம் ச்ரேயோ மார்க்கத்திற்கு வழி வகுத்து துக்கமில்லாத வாழ்வைக் கொடுக்கும். துக்கமோ, துயரமோ இல்லாத வாழ்க்கையே மோட்சமாகும்.

## நான்காம் நிலை:

"நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் நமது மனம், புத்தி முதலிய அந்தக் கரணத்தைச் சுத்தம் செய்வதாக அமையட்டும்" என்ற பாவனையுடன் செய்ய வேண்டும்.

அவ்வாறு செய்யும் பொழுது அச்செயல்கள் நமக்குள் இருக்கும் தீய எண்ணங்களை நீக்கி மனதினைத் தூய்மைப் படுத்தும். அப்படிப்பட்ட தூய மனமானது நம்மை சரியான முறையில் வழிப்படுத்தி, இறுதியில் மோட்சத்தை அடைய உதவும்.

## நல்ல எண்ணங்கள்

இப்படி இந்த நான்கு விதமான பாவனையுடன் செய்யும் செயல்கள் மிகவும் நன்மை பயப்பவை. வேதங்களும் இதைத்தான் கூறுகின்றன. ஏனெனில், நமது கலாச்சாரத்தில்

ஒவ்வொரு செயலுமே தெய்வீகத் தன்மை பொருந்தியதாகக் கருதப்படுகிறது. இப்படிப்பட்ட வாழ்க்கை முறை நமக்கு ஆத்மஞானம் அடைய வழி வகுக்கும். அதனால் பாவனை மிகவும் முக்கியம். "யத் பாவம் தத் பவதி" என்று சொல்லப்பட்டிருக்கிறது. நம் வாழ்க்கை முறை நம் எண்ணங்களைச் சார்ந்தே உள்ளது.

## மகிழ்ச்சியாக வாழ்க்கை:

செங்கற்களின் குவியல், வேறு எதையும் சாராமல், அழகிய வடிவம் கொடுக்க முடியுமா? முடியாது. ஒரு கட்டிடத் தொழிலாளியின் உதவியுடன் செங்கற்களை வரிசைப்படுத்தி முறையாகக் கட்டினால் தான் கட்டிடம் அழகாக அமையும். அது போலவே, இறைவன் நமக்களித்த புத்தியை சரியான முறையில் பயன்படுத்தி, நமது எண்ணங்களை சாஸ்த்திரத்தின் துணை கொண்டு ஒழுங்காக நெறிப்படுத்தினால் நமது வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக அமையும் என்பதில் ஐயமில்லை.

## பிரச்சனைகள்

தற்காலத்தில் நமது பிரச்சனைகள் இரண்டு விதமாக அமைகின்றன. 1. சுற்றுச்சூழல் மாசு, 2. மன அழுத்தம்.

இதற்கான காரணத்தை ஆராய்ந்து பார்த்தால் நாம் நமது சாஸ்திரத்தில் கூறியபடி வாழவில்லை என்பது விளங்கும். செய்யும் செயலில் இறைவனை நினையாமை, யக்ஞ பாவம் இல்லாமை, தர்மத்தைக் கடைப்பிடியாமை - இவை தான் காரணம்.

நமது முன்னோர்களின் வாழ்க்கை வரலாற்றைப் பார்த்தால் அவர்களது மகிழ்ச்சியான - அமைதியான வாழ்க்கை முறை புரியும். இறைவனுக்கு சமர்ப்பணம் செய்யும் மனப்பான்மையுடனும், பக்தியுடனும், யக்ஞ-பாவனையுடனும் எந்த ஒரு தொழிலையும் செய்தார்கள். இதுதான் அவர்களின் அமைதியான வாழ்க்கைக்குக் காரணம்.

## முன்னோர்களின் வாழ்க்கை

காலையில் படுக்கையை விட்டு எழுந்தவுடன், தரையில் கால்களைப் பதிக்கும் முன்,

"ஸமுத்ர வசனே தேவி, பர்வத ஸ்தன மண்டலே

விஷ்ணு பத்னி நமஸ்துப்யம் பாத ஸ்பர்சம் க்ஷமஸ்வமே"

என்று பூமாதேவியை வணங்கித் துதி செய்தார்கள். மரத்தின் அனுமதி பெற்றுக் குச்சியை ஒடிக்கும் முன்,

"ஆயுர் பலம் யசோ வர்ச: ப்ரஜாம் வசூளிக:
ப்ரஹ்ம ஞானாஞ்ச மேதாஞ்ச தன்னோ தேஹி வனஸ்பதே"

என்று துதி செய்து விட்டுப் பல் துலக்கினார்கள். அதே போல் குளிக்கும் முன்,

"கங்கேச யமுனேஸ்சைவ கோதாவரி ஸரஸ்வதி
நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸந்நிதிம் குரு"

என்னும் ஜலதேவதையை வணங்கி ஸ்நானம் செய்தனர். பிறகு சூரிய பகவானுக்கு சூரிய நமஸ்காரம் செய்து வழிபட்டனர். உணவு உட்கொள்ளுமுன்,

"அஹம் வைஸ்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹ - மாஸ்தித:
4 3
ப்ராணாபாந - ஸமாயுக்த: பசாம்-யந்நஞ் சதுர்விதம்"
4

- கீ - 15 - 14

என்று கூறி இறைவனை வழிபட்டு உணவு உட்கொண்டனர். உடலைப் பாதுகாக்க மட்டும் உணவு உட்கொள்ளாமல் நம் வயிற்றில் இருக்கும் "ஜாடராக்னி" எனப்படும் அக்னி தேவதைக்கு உணவை அர்ப்பணம் செய்தனர். இதுதான் ப்ராணாக்னி ஹோத்ரம். இயற்கையையே தேவதையாக வழிபட்டனர்.

வாழ்வின் ஒவ்வொரு செயலையும் இறைவனுடன் தொடர்புபடுத்தி வாழ்ந்தனர்.

ஊதியமோ, புதிய ஆபரணமோ, புதிய உடையோ எது வாங்கினாலும் அதை இறைவன் முன் வைத்து வணங்கி விட்டு, அதனை இறைவனின் பிரசாதமாக நினைத்து உபயோகப்படுத்தினர்.

பிறந்த குழந்தையைக் கூட இறைவனுக்கு அர்ப்பணம் செய்து பிறகு இறைவன் அளித்த வரமாக நினைத்து மகிழ்ந்தனர்.

## சடங்குகள்

சாஸ்திரத்தில் கூறப்பட்ட 41 விதமான சடங்குகளை (ஸம்ஸ்காரங்களை) இறைவனுக்கு அர்ப்பணித்தே செய்தனர். குழந்தைகளுக்குப் பெயர் சூட்டுதல், காதணி விழா, அன்னப்ராசனம், முடி இறக்கும் சடங்கு, அக்ஷராப்யாஸம், உபநயனம், திருமணம் போன்றவை சடங்குகளாகும். புதுமனை புகுவிழாவில் கூட முதலில் இறைவனின் திருவுருவப் படத்தை உள்ளே வைத்துவிட்டு மற்ற சடங்குகளைச் செய்தனர். இப்படிப்பட்ட ஸநாதன வைதிக முறைப்படி வாழ்க்கை நடத்தியதால்

அவர்கள் வாழ்க்கை மகிழ்ச்சிகரமானதாகவும், திருப்தியுடனும் இருந்தது.

பஞ்ச பூதங்களான ஆகாயம், வாயு, அக்னி, நீர், பூமியாலான உடல் தான் இந்த மனித உடல். அதுவும் இறைவன் நமக்குக் கொடுத்த பரிசுதான். அன்றாட வாழ்க்கையில் ஒவ்வொரு செயலும் இறைவனை நினைவு கூர்ந்தே செய்தனர் நம் முன்னோர். இரண்டு எழுத்துக்களை உடைய "கர்ம" என்னும் சொல் எப்படி நமது வாழ்க்கையைச் சீராக்குகிறது!

## இறைவனின் சிருஷ்டி

இறைவன் ஜீவராசிகளைப் படைக்கும் பொழுது கர்மாவையும் சேர்த்துப் படைத்து விட்டார். ஒவ்வொரு செயலையும் யக்ஞ பாவனையுடன் செய்தால் அச்செயல் உன்னைக் காப்பாற்றுவதோடு, காமதேனுவைப் போல் உனது விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் என்கிறார் பகவான் கீதையில்.

"ஸஹ யக்ஞா: ப்ரஜா ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:
3

அனேன ப்ரஸவிஷ்யத்வ-மேஷவோऽஸ்த்விஷ்ட காமதுக்"
4 4

- கீ - 3 - 10

"தேவான் பாவயதானேன தே தேவா பாவயந்து வ:
4 4

பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப் ஸ்யத"
4 2

- கீ - 3 - 11

இவ்வாறு நம் முன்னோர்கள் தன் செயல்களின் மூலமாக இறைவனை வழிபட்டு இறைவனின் அருளால் மகிழ்ச்சியாக, ஆரோக்கியமாக, நிம்மதியாக வாழ்ந்தனர். அவர்களது வாழ்க்கைப் பண்பாட்டினை நாம் சிரமேற்கொண்டு வாழ்வது இன்றியமை-யாததன்றோ? தார்மீகமான முறையில் வாழ்க்கை நடத்தியதால் அவர்கள் வாழ்க்கை மகிழ்ச்சியாக அமைந்தது. வயதில் மூத்தவர்கள் அனுபவத்தின் வாயிலாகக் கூறும் அறிவுரைகள் "விருத்த வ்யவஹாரம்" என்று கூறப்பட்டது.

நமது அறிவின் துணை கொண்டு இயற்கையை மாற்றுவது இயலாத காரியம். மனிதன் செயற்கை மழையை உருவாக்கி விட்டதாகப் பெருமைப்படுகிறான். அந்த அறிவு கூட இறைவன் அளித்த வரமல்லவா!

இந்த உண்மையை உணர்நது செயலாற்றினால் யக்ஞபாவம் தானாகவே வரும். இவையெல்லாம் சாஸ்திரத்தில் கூறப்பட்டவை.

சாஸ்திரத்தில் கூறியவை தானாக நமக்கு விளங்கி விடுமா?

எனவே, சம்பிரதாய குருவானவர் சாஸ்திரத்தில் சொன்ன சம்பிரதாயங்களை எடுத்துக் கூற வேண்டும். அப்பொழுதுதான் உள்ளது உள்ளவாறு உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கும்.

## கடமையும் உரிமையும்

மனிதன் அன்றாட வாழ்க்கையில் எத்தனையோ மனிதர்களை, பொருட்களைச் சார்ந்துதான் வாழ வேண்டியிருக்கிறது.

நமது அன்றாட வாழ்க்கையில், அம்மா, அப்பா, கணவன், மனைவி, வேலையாட்கள் என்று எத்தனைப் பேரைச் சார்ந்திருக்கிறோம்? அவர்களுக்கெல்லாம் நன்றி தெரிவிக்க வேண்டியது நம் தலையாய கடமையல்லவா?

கணவன், மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமை, மனைவி கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமை என்று பலவாறாக இருக்கிறது.

அவரவர் கடமையைத் தவறாமல் ஒழுங்காகச் செய்தால் உரிமை தானாகக் கிடைக்கும். உரிமைக்காகப் போராட

வேண்டியதில்லை. சாஸ்திரமும், கடமையைச் செய்யும்படி வலியுறுத்துகிறது. இவ்வாறு நடக்கத் தவறுபவனை சாஸ்திரம் திருடன் என்றே கூறுகிறது.

"இஷ்டான் போகான் ஹிவோ தேவா தாஸ்யந்தே யக்ஞபாவிதா:
4 3 4 4

தைர்-தத்தா-னப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேன ஏவஸ:"
3 3 4 4

- கீ - 3 - 12

"லோகாஸ்ஸமஸ்தா ஸுகினோ பவந்து" என்பது இந்த பிரார்த்தனையின் பொருள்.

## தானம்

யக்ஞ கர்மாக்களில் தானம் மிகவும் சிறந்தது. தானம் செய்வதன் மூலம் தியாக குணம் வளர்கிறது. அது ஆன்மீகப் பாதையில் முன்னேற நமக்கு உதவுகிறது. நம்மைத் தூய்மைப்படுத்துகிறது. ப்ருஹதாரண்யக உபநிஷத் இவ்வாறு கூறுகிறது.

"தமேதம் வேதானுவசனேன ப்ராஹ்மணா விவிதிஷந்தி யக்ஞேன
4 3

தானேன தபஸானாசகேன, ஏதமேவ விதித்வா முனிர்பவதி"
3 3 4

- 4 - 4 - 22

இந்த தியாக குணம் நமக்கு சிரேயஸைக் கொடுக்கும். இதுவே இறுதியில் எல்லா- வற்றையும் துறந்த துறவு நிலைக்குச் செல்ல உதவி செய்யும்.

## தியாகம்

ஒரு தாய் தன் குழந்தையைப் பாதுகாத்து வளர்ப்பதற்கு எத்தனையோ எண்ணற்ற தியாகங்களைச் செய்கிறாள். அதுபோல் வேதமாகிய தாய் ஆயிரம் தாய்க்குச் சமம் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. "ஸஹஸ்ர ஹிதைஷிணி வேத மாதா" சாஸ்த்திரத்தில் முதலில் நம்பிக்கை இருக்க வேண்டும். பின் சாஸ்திரப்படி வாழ்க்கை நடத்த வேண்டும்.

## ச்ருஷ்டி சக்ரம்

சரியான நேரத்தில் பெய்யும் மழை மூலமாக சரியான நேரத்தில் செய்யப்படும் அறுவடை மூலமாக நாம் உணவைப் பெறுகிறோம். உணவு மூலமாகத் தான் சந்ததிகள் - ஜீவராசிகள் தோன்றுகின்றன. உணவு மழை மூலம் கிடைக்கிறது. உணவினால் ஜீவராசிகள் உருவாகின்றன. ஜீவராசிகள் - குறிப்பாக மனிதர்கள் செய்யும் யாகத்தினால் - யக்ஞத்தினால் தேவதைகள் திருப்தி




அடைகின்றனர். வதைகளின் திருப்தியால் யக்ஞும் மூலமாக மழை உண்டாகிறது. இப்படி ஒவ்வொன்றும் ஒன்றைச் சார்ந்து ஒரு சக்ரமாக இருக்கிறது.

இந்த சிருஷ்டி சக்கரம் தேவதைகளைச் சார்ந்து உள்ளது. யாக யக்ஞங்களில் நாம் கொடுக்கும் ஆஹுூதியின் மூலம் சூரிய தேவதை திருப்தியடைந்து மழை கொடுக்கிறது.

"அக்ளென ப்ராப்தா ஹுூதி: ஸம்யக் ஆதித்யம் உபதிஷ்டதே
ஆதித்யாத் ஜாயதே வ்ருஷ்டி: வ்ருஷ்டேரன்னம் தத: ப்ரஜா"

- மனுஸ்ம்ருதி - 3 - 76

இந்த சிருஷ்டி சக்கரம் சுமுகமாக இருக்க வேண்டுமானால் யக்ஞ பாவனையுடன் நாம் தேவதைகளைத் திருப்திப் படுத்த வேண்டும்.

"ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்த்தயதீஹ ய
அகாயு - ரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸஜீவதி"
4 3 4

- கீ - 3 - 16

இவ்வாறு இந்த சிருஷ்டி சக்கரத்துடன் இணைந்து போகாமல் ஒருவன் தன் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதற்கு மட்டுமே வாழ்க்கை நடத்தினால் அவனது இந்தப் பிறவியே வீணானதாக ஆகும்.

## ஸ்வபாவம்

பொதுவாக, ஒவ்வொருவருக்கும் முற்பிறவியின் பாவ, புண்ணிய கர்மாக்கள் மூலம் ஸ்வபாவம் அமையும். அவன் அந்த ஸ்வபாவப்படி தான் நடப்பான் என்பது ஆதி சங்கரர் கூற்று.

"ப்ரகிருதி நாம பூர்வஜன்மக்ருத தர்மாதர்மாதி ஸமஸ்கார:
வர்த்தமான ஜன்மௌ அபிவ்யக்த:"

## ஸ்வாபாவிக ப்ரவ்ருத்தி

ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் தன் ஸ்வபாவப்படி மனிதத் தனமாகவோ, மிருகத்தனமாகவோ நடந்து கொள்வான். அவனது மனம் விருப்பு வெறுப்புகளால் நிறைந்திருக்கும். அப்பொழுது அவனது நடவடிக்கை மற்றவர்களுக்கு உதவுவதாகவோ அல்லது தடையாகவோ இருக்கும். இதுதான் ஸ்வாபாவிக ப்ரவ்ருத்தி என்பது.

## சாஸ்திரீய ப்ரவ்ருத்தி

இன்னொரு வகையானது, மனிதன் தனக்கு விருப்பமில்லாவிட்டாலும் சாஸ்திரத்தில் கூறியபடி நடந்து கொள்வான். இது சாஸ்திரீய ப்ரவ்ருத்தியாகும். இந்த வகையான மனிதர்களுக்கு மற்றவர்களின் நன்மையே முக்கியமானதாகத் தோன்றும்.

எடுத்துக்காட்டாக "தூமபானம் ந குர்யாத்" (புகை பிடிப்பது தவிர்) என்று சாஸ்திரம் கூறுகிறது.

ஸ்வாபாவிகப்ரவ்ருத்திப்படி நடப்பவன் இந்தச் செயல் சாஸ்திர விரோதமென்று தெரிந்திருந்தும் தன் விருப்பத்திற்கிணங்க அந்தச் செயலைச் செய்வான். பலவீனமான

மனதுடையவன் தான் இப்படிப்பட்ட சாஸ்திர விரோதமான செயல்களைச் செய்வான்.

தனக்கு விருப்பமாக இருந்தாலும், சாஸ்திர ப்ரவ்ருத்திப்படி நடப்பவன் குறிப்பிட்ட செயல் சாஸ்திர விரோதமாக இருப்பதால், அப்படிப்பட்ட செயல்களை ஒரு பொழுதும் செய்யமாட்டான்.

## ஐம்புலன்கள்

கண், காது, மூக்கு, நாக்கு, தோல் என்ற ஐம்புலன்களுக்கு அடங்கியே ஒவ்வொரு மனிதனும் செயல்படுகிறான்.

"இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ
3 3 2 3 2

தயோர்-ந-வசமாகச்சேத் தௌ "யஸ்ய பரிபந்தினௌ"
2 2

- கீ - 3 - 34

## விருப்பு, வெறுப்பு

இக்காரணத்தினால் நாம் ஒவ்வொரு நொடியும் ஏதாவது செயல் செய்கிறோம். ஒரு செயலும் செய்யாமல் ஒரு மனிதன் இருக்க முடியாது. நம்மை அறியாமல் நமக்குள் மறைந்திருக்கும் விருப்பு வெறுப்புகள் தான் நம்

ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையாகும் எதிரிகள். அதனால் விருப்பு, வெறுப்பில்லாமல் செயலாற்றுவது மேன்மையைத் தரும்.

## ஆசையும், கோபமும்

விருப்பு, வெறுப்பு உண்டாவதற்கு முக்கியமான காரணம் ஆசையும், கோபமுமாகும். நிறைவேறாத ஆசைகளே கோபமாக மாறுகின்றன. அப்படி மாறுகின்ற கோபம் நமது பகுத்தறியும் அறிவினை அழித்து விடும்.

"சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி" என்கிறார் திருவள்ளுவர். எனவே, நமது ஆசைகளே விருப்பு, வெறுப்புகளுக்குக் காரணம்.

"காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோ குண ஸமுத்பவ:
4 3 4

மஹாசனோ ம''ாபாப்மா வித்த்யேன-மி'' வைரிணம்"
2 4

- கீ - 3 - 37

விருப்பு, வெறுப்புகளுக்கு அடிமையாகாமல் சாஸ்திரத்தில் கூறியபடி நடப்பது மேன்மை யானதாகும். இப்படிச் செய்யப்படும் செயல்கள் உன்னதமான செயல்களாகக் கருதப்படும்.

## இறை உணர்வு

இறைவனே யக்ஞ பாவனையுடன் சாஸ்திரத்தில் கூறியபடி செயல்கள் செய்கிறான். அதனால் தான் நாம் கோயில்களில் வழிபாடு, யாகம் முதலிய தர்ம நெறி முறைகளைக் கையாள்கிறோம். ஸனாதன தர்மத்திற்கு ஆதாரமான வேதங்களை இறைவனே நமக்கு அருளியிருக்கிறான். வேதம் என்பது ஏதோ-வொரு புத்தகத்தில் மறைந்திருப்பதல்ல. எந்தச் செயல் செய்யும் பொழுதும் இறை உணர்வு (மனசாட்சி) நம் இதயத்தில் மறைந்திருக்கும். யக்ஞ பாவனை என்பது அந்த இறை உணர்வின் பிரதிபலிப்பேயாகும்.

சாஸ்திரீய ப்ரவ்ருத்திப்படி நடக்கும் மனிதனின் வாழ்க்கை முறை, தர்மத்தின் அடிப்படையில் அமைந்திருக்கும். இது உண்மை. தன்னைப் பற்றித் தெளிவாக அறிந்த வேதங்களைக் கற்றறிந்த குருவானவர்,

"யத்ர யத்ர யக்ஞ: தத்ர தத்ர வேத:
யத்ர யத்ர வேத: தத்ர தத்ர யக்ஞ:"

என்று கூறியிருக்கிறார். இதுதான் இந்து மதத்தின் வாழ்க்கை முறை. இது தான் நமது

பண்பாடு. இந்தப் பாரத பூமி இப்படிப்பட்ட பண்பாட்டின் பிறப்பிடம். வேதங்களைக் காப்பாற்றும் இந்தப் பாரத பூமிதான் வேதங்களின் பொக்கிஷம்.

இப்படிப்பட்ட உயர்ந்த பண்பாடுடைய பாரதத்தில் பிறந்த நாம் இந்த வேதங்களின் மதிப்பை உணர்ந்து, இந்த மனித சமுதாயத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாக வாழ்ந்து காட்ட வேண்டும். நமது குழந்தைகளையும், அடுத்த தலைமுறையினரையும் வேத நெறிப்படி வாழ நாம் வழிகாட்டிகளாக இருந்து அவர்களையும் அவ்வாறு உருவாக்க வேண்டும்.

"சரீர மாத்யம் கலுதர்ம ஸாதனம்"

## மனிதப்பிறவியின் மேன்மை

இந்த மனிதப் பிறவியே, பிறவித் தளையிலிருந்து விடுபடுவதற்கு நமக்கு அளிக்கப்பட்ட கருவியாகும். அதை நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். நம்மைச் சுற்றியிருக்கும் உறவுகள், அண்டை அயலார் மற்றும் சுற்றுச்சூழல் அனைத்தையுமே இறைவனின் படைப்புகளாக ஏன் இறைவனாகவே பார்க்க வேண்டும். எந்த ஒரு செயலையும், இறைவனின் ஆணையாக ஏற்று தர்மப்படி பலனில்

பற்றில்லாமல், கடமை உணர்வோடு செயலாற்ற வேண்டும். "நான்", "என்னுடையது" என்னும் குறுகிய மனப்பான்மையை விட்டொழித்து இறைவடிவமாகப் பார்க்கும் சமமான நோக்கினை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

"மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்$_4$ம சேதஸா
நிராசீர் நிர்மமோ பூ$_4$த்வா யுத்$_4$யஸ்வ விக$_3$த ஜ்வர:"

- கீ - 3 - 30

இப்படிச் செயல்பட மனமுதிர்ச்சியும், மன உறுதியும் மிகவும் அவசியம்.

## முடிவுரை

உயர்ந்த அறிவுடைய பெரியோரின் நட்பு, ஆன்மீக சம்பந்தமான பாட நூலறிவு, சாஸ்திர முறைப்படி அமைந்த வாழ்க்கை முறை இவைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையென்றால் நாம் செய்யும் செயல்களே நம்மை பந்தப்படுத்தி சம்சாரத்தில் ஆழ்த்தி விடும்.

மாறாக கர்மங்களையே கர்மயோகமாகச் செய்யும் பொழுது, அந்தக் கர்மங்களே அந்தக்கரண சுத்தியைக் கொடுத்து,

மோட்சமடையப் பாதை வகுக்கும். முடிவில்லாத பிறப்பு, இறப்புச் சக்கரத்திலிருந்து விடுபட முடியும். இப்படிப்பட்ட செயல்கள் "இவ்வுலகிலேயே இப்பொழுதே, முக்தி" என்கின்ற உயர்ந்த பதவியான "ஜீவன் முக்திக்கு" வழிவகுக்கும். மறுபிறவி இல்லாத உயர் நிலைக்கு நம்மை அழைத்துச் செல்லும். இதுதான் கர்ம யோகத்தின் சிறந்த அந்தரங்க ரகசியமாகும். எவனொருவன் இப்படிப்பட்ட கர்ம யோக வாழ்க்கை முறையைக் கடைப்பிடிக்கின்றானோ, அவன் நிச்சயமாக, உறுதியாக முக்தி பெறுவான். உள்ளங்கை நெல்லிக்கனிப் போல் அவனது வாழ்க்கை தெளிவானதாக, பிரகாசமானதாக அமையுமென்பதில் ஐயமேயில்லை.

"ஆத்யாத்மிகஜீவனமே - ஆரோக்கியசூத்ரம்
வைதிகமார்க்கமே - ஜீவனமந்த்ரம்
சாஸ்திரச்ரவணமே - ஞானநேத்ரம்"

<u>ஓம் தத் ஸத்</u>